புருடனைக்கொல் பாவியான் புண்ணியரே பெறப்பெகின்
னருடனைக்கொள் வதற்கடைந்தே னழுகிற்றே யழுகிற்றே
வெருடனைக்கொன் றடியானை மேன்மேலு முயர்த்திமிகு
தெருடனைத்தந் தருள்கருணைச் சிவயோகாம் பிகைத்தாயே. (௪௪)

விதலையெனற் கிருபொருளு மேவவுழ லிவ்விழிநாய்
கதவயிர நமனழுத்துங் கருநரகப் பெருங்கடற்கோர்
மிதவையென நின்னருடந் தாட்கொண்டாய் வியப்பிதுவே
சிதவயிரக் கலன்பூண்ட சிவயோகாம் பிகைத்தாயே. (௪௫)

நாயுருவிற் கடையாகி நரகுழக்கப் போமெனது
பேயுருவந் தவிர்த்தாய்நின் பெருங்கருணைத் திறமென்னே
சேயுருவிற் கிரங்காரியார் சிவயோகாம் பிகைத்தாயே
வேயுருவத் தோளாயென் றிலக்குமியு மிகத்துதித்தாள். (௪௬)

அதர்மனென்போன் றன்பெயர்முன் னகன்றவொரு பெயர்புனைந்தான்
பதமருவு மிலக்குமியு மிலக்குமியே யெனப்பட்டா
ளிதமருவுந் தனுமதியி னெய்துபெருந் தரிசனத்தின்
சுதமிலிரு முதுகுரவர் களுமிவர்க்குத் துணைந்தருள்வார். (௪௭)

மறையோனைக் கணநாத ருக்கிவளர் திருக்கைலை
யுறைவாயென் றுய்த்தனரா ளாட்கொண்ட வுமாபதியார
கறைதீரு மவ்வனநம பணிசெய்யுங் காதலியாய்க்
குறைதீர வுறையென்று ளிலக்குமியைக் கோமளையே. (௪௮)

வாளுடையப் பொலியும்விழி யிலக்குமியை மறைக்குலத்துத்
தாளுடையப் பிறந்தானை யாளுடைய தனமைகணடே
வேளுடைய விழிதிறந்த பெருந்துறைவாழ் விததகரே
யாளுடைய ராளுடையா ரென்றகில மெடுத்தேத்தும். (௪௯)

மிக்கதவச் சாபாலி யருள்வழிமே விருவோரு
மிக்கபுகழ்க் கைலாய மேயதிற மெடுத்துரைத்தா
மிக்கவளப் பெருந்துறையுண் மேவியமற றொருகால்வர்
மிக்கவருட் டிறம்பெற்று விளங்கியகா தையுமவிரிப்பாம். (௫0)

அதர்மனும் இலக்குமியும் முத்தியடைந்தபடல முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஉ௯௩.

---

# வேடன் முதலிய நால்வர்
# அருள்பெற்றபடலம்.



புத்தியெய் தினர்களும் பொலிசு வர்க்கமுற்
சித்தியெய் தினர்களு நீரத் தீர்த்தயர்
முத்தியெய் தினர்களு முனிவர் வாதவூர்
நித்தியர் திருவடி நேசித் தார்களே. (௧)

வேறு.

ஓங்குமல யாசலத்தி னொருசாருள் ளதூநன்மை
தேங்குதிறம் மருவாத சிலைவேடர் செறிசேரி
யாங்கெறிக்குந் தடிபறிகொல் லென்னுமார வாரமலாற்
பாங்குபெறு பிரக்கமொழி யெந்நாளும் படுதலிலை. (௨)

அனையகுறச் சேரியிடை யாழிசூ ழிலங்கையிடை
வினையகிசா சரர்குலத்துள் வீடணன்போ லொருவனுளன்
புனையவொளிர் சிவலிங்க மாலைபுனை தருமுடியா
னினையவினித் திடுபெருமா னடிக்கன்பு நீங்காதான். (௩)

அன்னவனுக் குரியமனை யாளிரதி யெனப்பொலிவாள்
பன்னருங்கற பினிற்சிறந்தாளை மணவாளன் பணிபுரிவா
ளின்னமுத நிகரவளோ டியல்குறவ னிறடிவினோத
தென்னகிழங் குங்கவரா வினிதுண்டு வாழநாள். (௪)

ஆயகிரா தசேரிக் கதிபனு மொருகொடியோன்
மேயவிவன மனைவியெழில விழைந்தொருநாட் கண்ணுற்றான்
பாயமத வேளவிடுக்கும் பல்கணையால் புண்ணுற்று
னேயவினிச் செயலாவ திங்கெனறே யெண்ணுற்றான். (௫)

தன்னுடைய கணவனுயிர் தபசசாடி னுலன்றி
மின்னுடையப் பொலிமருங்குல விருமபெணகு வசமாகாண்
முன்னுடைய நல்வினையான் முடிப்பதறகாம் வலியுளளோன
கொன்னுடைய விக்காலங் குறிததபடி செயல்வேணடும். (௬)

என்றுகரு தியதுணர்ந்தா னென்செய்வேன் சிவனேயென்
றன்றுமனை வியுடனொடு வநின்றும வெளிப்பட்டுத
துன்றுமிரா வழிநடந்து துட்டனிவிழி காணுமே
மன்றுணட நவில்பெருமான் பெருந்துறையை வந்தடைந்தான். (௭)

கேடில்பெருந்துறையடைந்த கிராதனரு மனைவியொடு
நாடியவா னவதீர்த்த நயந்தாடி நீறணிந்து
கூடியபே ரருளான்ம நாயகர்சந் நிதிகுறுகிச்
சாடியவா தனையுடையா னுய்ந்ததாழ்ந் தாழ்ந்தெழுவான். (அ)

இராமுழுதுந் துயிலானு யியல்வீதி வலஞ்சூழ்வான்
பராபரனே யடியேனைப் பாதுகாத் தருளென்பான்
விராயபகை வன்வலியோன் வெங்கொலைசெய் திடல்குறித்தா
னராவணிவா யடியேனு னடைக்கலங்கா ணெனப்புகல்வான். (௯)

அற்புமிக விவனிவ்வா றுறைதரமற் றவன்மனைவி
வெற்பரைய னினிதீன்ற விளங்கிழையோ காம்பிகையே
பொற்பமையுந் தாயேநின் புத்திரியா னென்னுடைய
கற்புவழு வாவண்ணங் காத்தருள்வா யெனக்கரைவாள். (௧௦)

இந்தவா றமர்தருநா ளிறவுளர்தங் குலத்தலைமை
யந்தமா பாவியிவ னணங்கினொடு மெங்கொளித்தான்
முந்தநீர் தேடுமென முற்றியசில் வேடரெழுந்
தெந்தவூ ருந்துருவிப் பெருந்துறைவந் தெய்தினர். (௧௧)

மனைவியொடுஞ் சிவப்பிரியம் வாய்ந்தமர்வே டனைக்கண்டு
துனையவிறை யவன்பாற்போய்ச் சொற்றரைப் பொழுதத்தே
கனையிருண்மால களிற்றுமதன் கடுஞ்சமருக் காற்றுனுய்ப்
புனையிழையா சையினெழுந்தான் போர்குறித்துப் படைஞரொடும். (௧௨)

வந்துபெருந் துறைபுகுந்தான் மாதேவன் சந்நிதியிற்
கொந்துமலர் புனைந்தகுழற் குறக்கோதை யுடன்பணிந்து
நந்துவிருப் பொடுநிற்கு நல்லவே டனைக்கண்டான்
சந்துசெறி வரைக்குறவர் தமக்கிறையோ னுங்கொடியோன். (௧௩)

எடாநீ யெனைத்தப்பி யிங்குற்று யுய்திகொலோ
தேடவரும் பொருளிறைவற் சேரவதென வுணராயோ
கூடமனை வியைகொடுதீ கொடாயேலுன் னுயிராவிப்பன்
மூடவிடுத் தொழிதியென மொய்படைஞ ரொடுவளைத்தான். (௧௪)

அதுதெரிபு நடுநடுங்கி யருளான்ம நாயகவோ
முதுவிடமுண் டுலகளித்த முழுமூல காரணவோ
கதுமெனவந் தெனைவளைத்தான் கடும்பாவி யானினிச்செய்
வதுதெரியே னபயமென வாய்திறந்து முறையிட்டான். (௧௫)

ஆலமெழ நடுநடுங்கி யன்றயன்மா லுள்ளிட்டார்
சாலவும்வந் தபயமெனத் தளராது புரந்தனையேவங்
காலனைக்கண் டபயமெனக் கைகுவித்தல் செய்தசிறு
பாலனைக்காத் தவற்கொன்ற பண்ணவனு நீயலையோ. (௧௬)

வெங்காள மெடுத்தயின்ற விமலவோ யோகமயில்
பங்காள வோமலரோன் படுதலையிற் பலிகொண்ட
கங்காள வோகொடியோன் கடியேனைக் கடியாம
லிங்காள வேண்டுமெனக் கென்றுமடைக் கலமென்றான். (௧௭)

புலிவலையப் பதைக்குமான் போற்பதைக்குங் குறக்கொடியு
மெலிவமைநின் மகட்கிரங்க வேண்டும்யோ காம்பிகையே
வலியவன்பன் மூர்க்கரொடும் வளைத்தனனியா னென்செய்கேன்
கலிபொருமற் றவற்றூரந்தென் கற்புநிலை காவென்றாள். (௧௮)

வருந்தாமே யுலகனைத்து மீன்றெடுத்த மாதாவே
பொருந்தாதா னெனைத்தீண்டிற் போவதொழி யாதெனுயி
ரருந்தாநஞ் சயின்றவர்பா லமர்ந்தருள்யோ காம்பிகையே
கருந்தார்வண் டமர்குழலாய் காப்பதுநின் கடனென்றாள். (௧௯)

அம்மையருள் சுரந்தெங்க ளான்மநா யகற்பாராச்
செம்மையடி கேள்பரா முகஞ்செய்கை தகாதென்னக்
கொம்மைவிடை யுடையானுங் குறுமுறுவல் கொண்டருளி
வெம்மையொரா யுதமவன்கை மேவவிடுத் தருள்செய்தான். (௨௦)

அந்தவாள் கையுறலகண் டையாரு ளெனதெரிந்து
சந்தமார் வரைக்குறவன் றுப்புலிப்போத் தெனப்பாய்ந்து
வந்தயா வருஞ்சிறைய மாட்டியிறை வளைத்தள்ளி
யுந்தமார் பாயுதங்கொண் டேன்றிமிதித் துயிர்குடித்தான். (௨௧)

யாவருங்கண டதிசயித்தா ரான்மநா யகர்புரிந்த
மேவரும்பே ரருணினைந்து விடாதபெரு விருப்பினொடும்
பாவருந்தன் மனைவியொடும் பரம்பரனு லயத்துள்ளா
லோவருந்தே வாய்நின்றான் மற்றிருவர் திறமுரைப்பாம். (௨௨)

மாதங்க னெனுமொருவன் மனைவிமா தங்கியொடும்
பாதங்க மரியயனு லறியாதார் பதமபணிவா
னாதங்க மொழிந்தானாய்க் கேடுகுறிப் பதினமைந்தா
னாதங்க வவன்றுதியோ நவிற்றுமொரு திறம்பூண்டான். (௨௩)

இந்தவிதம் பற்பலநாண் மனைவியொடு மிவனியங்கச்
சந்தமறைப் பொருளாரு ரவற்கிரங்கித் தாரணியி
லெந்தவிடத் தினுமுளபுன் றெய்வமெலாங் கோடேத
முந்தமகிழ் தரும்பறைக்கு மவ்வாறே மகிழ்முயங்கும். (உ௪)

பறையடித்துக் கோடேதப் பிரசன்னப் படுமென்றே
ரறைவரந்தந் தனனீயு மனையவரைக் குறவன்போன்
முறையினிலை நிற்றியென முன்னவன்பே ரருள்புரிந்தா
னிறைமனைவி யொடுநின்று னிகழுமொரு மாதங்கன். (உ௫)

குறவன்முத னல்வருக்குங் கோமான்பே ரருள்புரிந்த
வறமலிகா தையையுரைத்தா மருந்தவஞ்செய் நைமிசத்துத்
திறமலிமா முனிவரெலாம் பெருந்துறைசேர் தருச்சித்து
திறமலியுந் திருவருள்பெற் றமர்ந்ததிற நிகழ்த்துவாம். (உ௬)

வேடன் முதலிய நால்வர் அருள்பெற்றபடல முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கடுகக.

---

# நைமிசமுனிவர் பெருந்துறையடைந்து பூசித்தபடலம்.

சேல்காட்டி மிளிர்வயல்சூழ் தில்லைவா ழந்தணாதம்
பால்காட்டி வாசகவாச் சியம்பகர வேண்டுமென
மால்காட்டி யிடாச்சபையிற கைகாட்டி வழிவிட்டா
கால்காட்டி யெமையாளுங் கருணையுடை யவராரூர். (௧)

தாதநெறி முதலனைததுக் தகப்பயின்ற சவுனகன்முன்
மாதவமா முனிவரெலாம பெருந்துறைமான் மியமபகாந்த
சூதமுனி வரன்பாதந் தொழுதெழுந்து முன்னிருந்து
காதவொரு விண்ணப்ப காஞ்செய்வ துணடென்றார். (௨)

அன்னதேவ னெனவினவ வருமறையா கமமுதலா
வென்னபல நூலுமெடுத் தியம்புதலம் பெருந்துறையென்
றுன்னருளி னுணர்ந்தே மீங்கடைந்து தரிசிக்கத்
தன்னமிலா வேணவாத் தலைக்கொடுநின் றனவென்றார். (௩)

என்றவுரை செவியுறலு மிருந்தவத்துச் சூதமுனி
நன்றமையு மிவ்வாலச நமக்குமுன மேயுளதா
லன்றலிலா நீவிரெலாம் புறப்படுமி னியாமுமுடன்
றுன்றவரு வேமென்றா னெமுடித்துத் தொழுதெழுந்தார். (௪)

அந்தநா ளன்றுளே யாகநனி மனமகிழ்ந்து
நந்தவான் வழிக்கொண்டு நடக்கின்றா ரக்காலை
முந்தனே யெனுஞ்சூத முனிசவுன காதியரைச்
சந்தமார் தரநோக்கித் தலமனைத்துந் தெரித்திடுவான். (௫)

தன்கணடைந் திறந்திடுவா ரினியிறவாத் தகையருளிப்
புன்கணுழுந் திடுதலமிப் பொழினடுத்தோன் றிடல்காண்மி
னன்கணியுள் மாறுகப் பொதுநாமஞ் சிறப்பாக்கி
வன்கணமல மாற்றியமர் வரையிதுகண டிறைஞ்சிடுமின். (௬)

வெள்ளியமா மலைபெயர்த்தான் மிகமுயன்றும் பெயர்க்கரிய
வொள்ளியமா பலவிலிங்க முறைதான மதுகாண்மி
னுள்ளியசீர் வடவெழுத்தச் சுட்குறிநீர் கெடிலுண்முதல்
புள்ளியகவ் வேறமுதற் புணர்தார மிதுகாண்மின். (௭)

சரநாக மொருமூன்றுட் டாநாக மல்லாத
வுரனுக விரோதித்துத் தொழுவரைமற் றுதுகாண்மின்
கரவார்பால் வஞ்சமிலாா வஞ்சநிழல காதலித்து
விரவாநன் கமர்தாண மெய்த்தவத்தி ரிதுகாண்மின். (௮)

புண்ணியநா வலர்கோவைச் சங்கிலியார் பொருட்டவர்பே
ரண்ணியமெல் லொற்றைவல்லொற் றுக்கியலூ ரிதுகாண்மி
னெண்ணியவோர் காதுவைக்கொண் டெழுதாதுஞ் சணபையாகோ
னண்ணியமுன் னிரப்பவொளிர் நற்றலமற் றதுதொழுமின். (௯)

பேயுருவ முறவடைந்தும் பின்ஞகனே யிவ்வுருவர்
தாயுருவ மெனப்பட்டார் தொழுந்தலமற் றிதுகாண்மின்
ஆயுருவ மறைமாவார் மறைமாவி னடியமர
வேயுருவத் தோளிதொழு மெய்த்தலமற் றதுகாணமின். (௧௰)

---

௬. ஸ்ரீகாசி. ௮. திருக்காளத்தி. ௧௦. திருவாலங்காடு
,, ஸ்ரீசைலம். ,, திருப்பாசூர். ,, திருக்கச்சியேகம
௭. திருகோகர்ணம. ௯. திருவொற்றியூர். பம்.
,, திருகேதாரம. ,, திருமயிலாப்பூர்.

ஒருகழுகு காணாத வொண்முடியா ரருணோக்கி
யிருகழுகு தொழுமவர்சொல் லெனும்விலங்க லிதுகாண்மின்
மருவுபல நூன்மொழிக்கு மாறாக வயங்கழலாய்ப்
பொருமிருவ ரகத்தினிருள் போக்குமலை யதுகாணமின். (கக)

புரமூன்று மொருகணையாற் பொடித்ததல மிதுகாண்மி
னுரமார்ந்த வந்தகனை யுருட்டுதல மதுகாண்மின்
பரவான்ற மாணிவழி பட்டகுழி யுதுகாண்மின்
சிரமேந்தி தினைப்புனத்துற் பவித்ததே மிதுகாண்மின். (க௨)

நீர்செலுத்தல் போற்குளத்து நிதிசெலுத்து மணிமுத்தப்
பேர்செலுத்து நதிசூழும் பெரும்பதிமற் றிதுகாண்மி
னூர்செலுத்து மொருவரைக்கல லொடுஞ்சுமந்து நனிநரலைப்
பேர்செலுத்து புனல்செலுத்தப் பிறங்குபதி யதுகாண்மின். (க௩)

ஆக்கறம ருகமியற்ற வளித்தலப யம்புரியப்
போக்கலழற் சிகையாக்க மறைத்தலொரு தாள்புரிய
நீக்கலொரு குஞ்சிதத்தா ணிகழ்த்தமறை முதலின்பந்
தேக்கவுயி ருறநடிக்குந் திப்பியததே மிதுகாண்மின். (க௪)

கைத்தோணி யரவாது கடல்கிடந்த படிகாப்பக்
கைத்தோணி விடுத்தனைதநுங் காத்தாரக ணிதுகாண்மி
னெய்த்தோவென் றடைந்தாதம் பிணியனைத்து மிரியவெல்லா
மெய்த்தோதஞ் சூழுமருந் தீவார்தே மதுகாண்மின். (க௫)

வழுவாத மலர்க்கணையான் மாணெழில்சே ருடம்பையழ
லெழுநாவுஞ் சுவைகாண விட்டதல மிதுகாணமின்
கழுதாடு காட்டாடு கால்கால்கா லெனக்கடுகும்
பொழுதேவன் மார்பமுறப் பொருததுதல மதுகாண்மின். (க௬)

குடைவார்த மொருகுளக்கட் கண்மலரொன் றறக்கொடுக்கு
மடைவார்கண் மலர்பலவா முக்குளக்கண ணதுகாண்மி
னுடையார்நெஞ் சொருவாத வுலகீன்ற வரமங்கை
விடைவார்கே தனற்போற்றி விழைந்ததல மிதுகாணமின். (க௭)

---

கக திருக்கழுக்குன்றம். க௨ திருத்தினைநகர். க௫ புள்ளிருக்குவேளூர்.
,, திருவண்ணாமலை. க௩. திருமுதுகுன்றம். க௬. திருக்குறுக்கை.
க௨. திருவதிகை. ,, திருப்பாதிரிப்புலியூர். ,, திருக்கடவூர்.
,, திருக்கோவலூர். க௪. சிதம்பரம். க௭. திருவெண்காடு.
,, திருமாணிகுழி. க௫. சீகாழி. ,, திருமயிலாடுதுறை.

புரகரன்வெங் கரியுரித்துப் போர்த்தியதே மிதுகாண்மின்
வரமிகுமா துலன்வேள்வி மடித்தவிட மதுகாண்மின்
றரமிகுவெஞ் சலந்தரனைச் சாடியதே முதுகாண்மின்
பரவரிகண் ணிடந்துவனை பெற்றபதி யிதுகாணமின். (௧௮)

ஒன்பதுகோ டியர்சித்த ரொருங்குதொழக் கற்பத்தும்
வன்பதுசாக் தரசுகிலை மாத்தலமற் றிதுகாண்மி
னன்பதும மாதிகொடு நலங்கொள்பதி யொருகோடி
யன்பதுவா யுருத்திரரேத் தெடுத்ததல மதுகாணமின். (௧௯)

பரவுபெரு நதியனைத்தும் பன்னிரண்டாண் டிற்கொருகால்
விரவுதிற மடைந்தாட விழைபுனற்றே மிதுகாண்மின்
கரவுதவிர் திருநந்தி காதலித்துத தவஞ்செய்தே
யுரவுமிக நினைத்தவெலா முற்றதல மதுகாண்மின். (௨௦)

கோழியர்கோ னுளங்களிப்பக் காவிரிநீர் கொளுமாரம்
வாழியநீ ரொடுங்கொணடார் வாழிடமற் றிதுகாணமின்
வீழியவா யொருத்திக்காத் தாயுமாய் வியக்கவரு
ளாழியநஞ் சுண்டபிரா னமர்வரைமற் றதுகாண்மின். (௨௧)

அரதனமா விலங்கலென வறைவிலங்க லிதுகாண்மின்
மரகதமா மலையென்ன வழங்குமலை யதுகாண்மி
னிரவியம னதிகாரம பெறறதல முதுகாண்மின்
பரனுமையோ ருருவாகிப் பரிந்தமர்தே மதுகாணமின். (௨௨)

கடனுகைக் காயாரோ கணாளித்த பரியுகைக்கு
மடலார்குஞ் சரமுகைக்க வருளியதே மிதுகாண்மின்
கெடல்சாரா வரசசபை கெழுமிமுனி வரர்காண
மடலாகொன் றையர்நடஞ்செய் மாத்தலமற் றதுகாண்மின். (௨௩)

கொழுவனையின் சாரமறக் குடித்தவாதே மிதுகாணமின்
பொழுதினுற விகள்பூசை புரிந்ததல மதுகாண்மின்
செழுமலரோன சிரங்கொயத திப்பியதரே முதுகாணமின்
முழுவலிமா றலைவினுனி முருக்கியதே மிதுகாண்மின். (௨௪)

---

௧௮. திருவழுவூர். ,, திருப்பறியலூர். ,, திருவிற்குடி. ,, திருவீழிமிழலை.
௧௯. திருவாவடுதுறை. ,, திருவிடைமருதூர்.
௨௦. திருக்குடந்தை. ,, திருவையாறு.
௨௧. திருவானைககா ,, திருசசிராபபள்ளி.
௨௨. இரதநனகிரி. ,, திருவீங்கோய்மலை. ,, திருப்பைஞ்ஞீலி
௨௩. திருச்செங்கோடு.
௨௩. திருவஞ்சைக்களம். ,, திருப்பேரூர்.
௨௪ திருக்கற்குடிமாமலை. ,, திருவெறும்பியூர. ,, திருக்கணடியூர. ,, திருவாரூர்.

புண்டரிக முனிவனையா ரோகணஞ்செய் புரப்பெருமா
னண்டர்தொழ வீற்றிருந்தற் கடியதல மதுகாண்மின்
பண்டரிய மறையனைத்தும் பூசித்துப் பயன்பெற்ற
வண்டரிக வாப்பொழில்சூழ் வளமபதிமற் றிதுகாண்மின். (உ௫)

பண்டுதச முகற்செகுத்த பழிதீர விராகவன்முன்
மண்டுபெருங் காதலொடு வழிபடுதே மிதுகாணமின்
விண்டுவனத் திடைப்பிறந்த வெணமூத்தே யெனக்களாந்து
தொண்டுபடு வார்க்கருளுஞ் சுந்தரர்வைப் பதுகாண்மின். (உ௬)

வனமணக்கு முருவமெனன் மாறிநறுங் கொன்றைதும்பை
யினமணக்கு மருவுருவ மியைந்தடுதே மிதுகாண்மின்
கனமணக்கு முடிமுதலாக் கைதொழுமூன் றிடங்கொண்டெம்
மனமணக்கும் படியமரு மால்வரைமற் றதுகாண்மின். (உ௭)

எம்மறையு மொழிந்தார்கை யேட்டெழுத மொழிபெயர்த்தே
யம்மறைசொற் றவருதித்த வருந்தலமற் றதுகாணமின்
மும்மறையும் புகழ்சைவத் திறமுழங்கு நீருநெருப்
பும்மறையர் வெளிப்படுத்தப் பொலிதலமற் றிதுகாண்மின். (உ௮)

தானகக ரத்திறனொடு சம்பந்தஞ் செய்தவரை
யானதிது கண்டிடுமி னழகியபி ரானெயென்
றீனமிலாள் கபோலததிற கிடைளிமுதத மிடப்பெற்ற
வானவர்நா யகருறையு மாத்தான மதுகாணமின. (உ௯)

ஆயவசு கசப்பெயரா லலஙகுதல மதுகாணமின்
மேயபூழ்ச தெளிசோ மெயத்தலமற் றிதுகாணமின்
றாயதுணை மாலைபுணர் தோளார்தே முதுகாண்மின
மாயவிடைக் காளைபயில் வண்கான மதுகாணமின். (௩௰)

மாலமையாப் பாசுரந்தங் கியவாய்மற் றதுகாணமின்
கோலமெனும் பெயாபூண்டு கிளாதான மிதுகாணமின்
சாலவிருத் தேசுரப்பேர் தரித்தாகண் ணுதுகாணமின்
கோலமிகுத் தரமுதறசார் கோசமஙகை யதுகாணமின். (௩௧)

---

உ௫. திருநாகைககாரோணம.
,, வேதாரணியம்.
உ௬. இராமேச்சுவரம்.
,, திருநெல்வேலி
உ௭. திருககுற்றாலம.
,, கொடுங்குனறம்.
உ௮. திருவாதவூா.
,, திருவாலவாய்.
உ௯. திருப்பரஙகுன்றம்.
,, திருபபூவணம.
௩௰. திருவாடானை.
,, திருப்புததூா.
,, திருச்சுழியல.
௩௰ காளையார்கோயில.
௩௧. திருவேடகம.
,, திருவாப்பனூா.
,, திருப்புனவாயில்.
,, திருவுததரகோசமங்கை.

இன்னமுள தலங்களெலா மெடுத்தியம்ப முற்றுவவோ
நன்னருள ராங்கருதிற் றணித்தாக நண்ணியதா
லன்னதலத் திணையின்னே யடைந்துதொழு துய்வாமென்
றுன்னரிய பெருந்தவரே ருற்றூர்நூல கற்றூரே. (௩௨)

தூயபெருந் துறைவலமாச் சூழ்ந்துநிலத் திறங்கினார்
பாயவளங் கண்விடுத்துப் பார்த்தனர்தம மனந்திகைத்தா
மேயவிதற் குயர்வொப்பில் விளம்பலாமிதற்கிதுவென்
றூயமகிழ்ச் சியர்முனிவ ரனைவரும்வீ தியிற்பணிந்தார். (௩௩)

கோளுநா ளுந்தவழுங் கோபுரமு னடைந்திறைஞ்சி
யாளுநா யகர்கோயி லுட்புகுந்தக் கினிநீர்த்த
மூளுமா சமவிதியாற் படிந்தெழுந்து முனகர்கொளா
நாளுமா னந்தமருள் வெண்ணீறு நயந்தணிந்தார். (௩௪)

கண்மணிமா லிகைபுனைந்தே யஞ்செழுத்துங் கணித்தாராய்
விண்மணியால் விடலுவக்கு மழகளிற்றின் முனமேவி
யெண்மணியே யொருகோட்டுக் கற்பகமே யெனுமடியார்
வண்மணியே யெனத்துதித்து மலரடிபோற் றுபுசென்றார். (௩௫)

ஆளுடைய பெருமானை யரவமெலா மெடுத்தணியெண்
டோளுடைய சுந்தரனைச் சுடர்மூன்று நனிவட்கும
வாளுடைய மெய்யானை வருமறலி யுயிர்குடிதத
தாளுடைய வான்மநா தனைக்காணபா னுட்புகுந்தார். (௩௬)

சொக்கவிநா யகர்பாதந் தொழுதுகுருந் தடிநீழன்
மிக்கபொன்னு லாஞ்சபைமுன் விரைந்தேகிக் கணனுற்று
ரக்கரவா ரணியான்ம நாயகரை யப்போதத்
தககவாமே வியமகிழச்சி யாமேயோ சாறறவல்லேம. (௩௭)

இருகணுநோக் குறவிடுத்தா ரிருகைதலை மேற்குவித்தா
ரருகலிலா வரவோமென் றடுத்தடுதது வாய்நவின்றார்
பெருகுமுரோ மஞ்சிலிர்த்தார் விழிப்புனலும் பெருக்கினார்
வெருவழல்சான் மெழுகென்ன மிகவுடைந்துள் ளுருகினார். (௩௮)

இந்நாளே பிறந்தபய னெய்தியநா ளெனப்புகல்வா
ரிந்நாளே பசுபோத மிரித்துயர்ந்த நாளென்பா
ரிந்நாளே கண்படைத்த பேறெய்த நாளெனபா
ரிந்நாளே யின்பமுதநி யெய்தியநன் னாளென்பார். (௩௯)

அழுவாரு மழுதழுதாங் கன்பினுற பரவசராய்
விழுவாரு முடனெழுந்து மேனிபுரோ மஞ்சிலிர்ப்பத்
தொழுவாரு நாக்குழறத் துதிப்பாரும் பவக்கடனின்
றெழுவாரு நாமேயென் றிசைப்பாரு மாயினர். (சo)

இந்தவிதம் பாவுபுகீ றேற்றுநுத னகத்தரித்துப்
பந்தமிலா ரொருவாறு வெளிவந்து பனைதளிசூழ்ந்
தந்தமிலாக் குருந்தடியா சாரியனை யடிவணங்கிச்
சந்தநட ராசர்முத லியாவரையு முறத்தாழ்ந்து (சக)

படைத்தளித்துத் துடைத்துமறைத் தருளலெனப் பகரைந்து
முடைத்தலையிற் பலிகொண்டார்க் குடனிருந்து முடித்தருளி
யடைத்தவுல கத்தனைக்கு மாதார மாயெல்லா
முடைத்தனியோ காம்பிகைதன் றிருமுனமுற் றுருரவோர். (சஉ)

ஆங்குமுன முரைத்தபடி யகநெகக்கும பிட்டணைந்து
வீங்குபுகழ்த் திருவாத வூரர்முன மேவினர்
நீங்குதலின் மகிழ்ச்சியராய் நெஞ்சுருக நனிதொழுது
தேங்குபெருஞ் சிவயோகச் செழுந்தேறல் வாய்மடுத்தார். (சங)

அரிதுபுறம் போந்தொருசா ராச்சிரமஞ் செய்தமர்ந்து
பிரியமிகக் காலங்க டொறுமபேணிப் போயதொழுவார்
விரிதிரைத்தீர்த் தங்களெலாம் விருப்பினொடு படிதருவார்
தெரியமகிழ் வனத்தமருஞ் சிவக்கொழுந்தை யுநதொழுவார். (சச)

ஓயாத முயற்சியரா யிவ்வண்ண முறைதருநாண
மாயாத பெருங்கீர்த்தி மாணிக்க வாசகர்க்குச்
சாயாத வன்புடையார் தனுமாத விழாவெடுத்தா
ரேயாத வதுதரிசித திடுவாஞ்சை யுடையவராய். (சரு)

ஆயவா ரோகணமுன் னலங்கவரோ கணமளவு
மேயவுலா விருபோதும் விளங்குறக்கண் டினிதேத்தி
நாயனார் குருந்தடியி னகவருளுந் தரிசனமும்
பாயவிருப் புறப்பெற்றார் பெறப்படுவ தினியென்னே. (சசு)

எல்லாரு மிந்தவித மேத்தியா னந்தமுற்றுச்
சொல்லாருங் குருந்தவனச் சோதிபால் விடைபெற்றுச்
செல்லாரு நைமிசமாந் தமதிருக்கை யுறச்சேர்ந்தார்
வில்லாரும் புகழச்சூத முனிபூசை மேற்கொள்வார். (சஎ)

அரியபுரா ணந்தாங்க ளறிபாக்கு விரித்துரைத்த
பெரியபுகழ் முனிவரனைப் பிறகுமா சனத்தேற்றி
யுரியமலர் சந்தமுத லுபகரணம் பலகொண்டு
விரியவருக வியமர்தி விசேடமுறத் தாபித்து. (சஅ)

பரசிவனே யிவனென்னப் பாவித்துப் பூசித்து
வரசன்மா னமுங்கொடுத்து முகமனுரை வழங்கியபின்
விரவுமவன் மாணுக்க ரனைவருக்கு மேதகவிற்
கரவிறுகி லாதிகொடைத் தொழினிரம்பக் கண்டதற்பின். (சகூ)

ஏற்றமிகு சூதமுனி யிருக்கைசெல வுய்த்ததற்பி
னூற்றவவ னருளியவா றன்மநா தனைக்கருணை
மாற்றரும்பேயா காமபிகையை வாதவூர்ப் பெருமானைத்
தேற்றமுறச் சிந்தித்துத் தெளிந்துவாழ்ந் திருந்தனரால். (ருo)

இத்தகைய புராணத்தை யெழுதுவோ ரெழுதுவிப்போ
ருத்தமமே வப்படிப்போ ருணமையுறப் படிப்பிப்போர்
வித்தகமாம் பொருள்கேட்போர் கேட்பிப்போர் விளம்பிவர்கட்
கத்தமெடுத் துதவிடுவோ ராகியமற் றனைவோரும். (ருக)

இம்மையிலே பெருஞ்செல்வ மியையமனை மக்களொடுஞ்
செம்மைபெற வாழ்ந்திருந்திந் திரன்முதலோர் பதங்களெலாம்
வெம்மையற வனுபவித்து முறறியபின் மேலாய
வம்மையொரு பாலான்பொன் னடிமலர்சார்ந் தின்புறுவார். (ருஉ)

நோயடையார் மிடியடையார் நுணணியர்மே வியசபையின்
வாயடையார் தீயகுண மனையடையார் மாண்பிலலார்ச்
சேயடையார் சிறும்பலவாந் தீங்கடையார் செறிதளிர்பூக
காயடையார் குருந்தவனப் புராணமது கற்போரே. (ருங)

புணணியமார் பெருந்துறைப்பு ராணமதோர் கவிகற்றோ
திண்ணியவான் பெருஞ்சைவ சித்தாந்தச் செலவரா
யணணியசித் தாந்தசைவ மடைந்தின்ப நிலைபெறுவார்
நண்ணியமுற றுந்தெரிவார் நலமுரைக்க வல்லவரியார். (ருச)

தூயவள மோங்குபெருந் துறைப்புரா ணம்பொறித்த
நேயமலி புத்தகமோர் சிறுமனைவாய் நிலைபெறினு
மாயமனை பெருமனையா யளப்பரிய திருவடையு
மேயபுன்றே வமமனையு ரெல்லையினு முறுதன்றே. (ருரு)

### வேறு.

வாதவூ ரடிகளுக்குப் புரூரவனேற் படுத்தியவா வளஞ்சால் சாறு
பேதமிலா கமப்படியே நடந்ததுமுன் வைதிகத்தாற் பின்னுண் மாறிற்
றேதவமை யாவதுதெய் வீகத்தா லுணர்ந்திந்நா ளுறததாபித்த
போதமலி துறைசையெஞ்சுப் பிரமணிய முனிவர்பிரான் புகழ்மேல் வாழ்க.()

தூயதிரு வெண்ணீறுங் கண்மணியு மைம்பெழுத்துஞ் சூழ்ந்து வாழ்க
வாயபெருந் துறைவாழ்க வான்மனா யகர்வாழ்க வருள்கூற் கொண்டு
மேயசிவ யோகபரா பரைவாழ்க வாதவூர் விமலர் வாழ்க
நேயமலி யம்பலத்து நடநவிலுங் குஞ்சிதத்தா ணீடு வாழ்க. (௫௭)

நைமிசமுனிவர் பெருந்துறையடைந்து பூசித்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௬௫௬.

---

## திருப்பெருந்துறைப்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதி துணை.

# அரும்பதவுரை

## கடவுள் வாழ்த்து

க. மா - திருமகள். மோடு - பெருமை. ஆமை முதுகு - மந்தரமலையைத் தாங்குதற்குத் திருமால்கொண்ட ஆமைவடிவத்தின் முதுகு. ஓட்டை. தற்கு - தனக்கு; (விநாயகமூர்த்திக்கு). அருச்சிப்பார் - அங்கபூசை செய்பவர். என்பு ஆதி - எலும்பு முதலியவைகள். திருமாலின் அவதாரமாகிய கூர்மத்தைவென்ற விநாயகர் அதன் முதுகோட்டைச் சிவபெருமான் திருமார்பில் அணிந்தனரென்னும் புராணவரலாறு இங்கே அறிதற்பாலது.

உ. இலவு - இலவம்பூ. எம்பெருமாட்டி பார்வை - உமாதேவியாரின் திருக்கண்; சந்திரன். இருக்குமுன் நூல் - வேதமுதலிய நூல்கள். நம பெருமான் பார்வை - பரமசிவனுடைய திருக்கண்; சூரியன். பல-பலா மரம். குருந்து - குருந்தவிருட்சம். நிலவு-பிறை. விநாயகக்கடவுள் இத்தலத்தில் நிலவையுடைய சடைமுடியையும் வெயிலையுடைய திருமேனியையுமுடையராயிருத்தலால் இருமுதுகுரவர்களுடைய பார்வைகளிரண்டையும் இவர் ஒருங்கே பெற்றிருத்தல் ... புலப்படுத்திய தென்படி. மூத்தபிள்ளையிடத்தே தந்தைக்கும் இளையபிள்ளையிடத்தே தாய்க்கும் மிக்கவிருப்பம் நிகழுமென்பதைக் கம்பராமாயணம், மிதிலைக்காட்சிப் படலம் ௧௨௦ - ம் செய்யுள் முதலியவற்றிலுள்ள அம்பரீடன் கதையாலும், மூத்தப்பிள்ளையிடத்தேமட்டும் தந்தைக்கு விருப்பம் நிகழுமென்பதை, "முத்தமகனிடத்தால் வைத்த பிதாமகற்கே முதிரும்" என்னும் விநாயகபுராணச் செய்யுளாலும் அறியலாகும். ... லத்தில திருக்கோயிலின்றியே எழுந்தருளி யிருக்கின்றனர்.

௩. தக்க ...ன்!. வினாய் - கேட்டு. அகல மறை - விரிவான வேதத்தினை. மேகக் கவினாய் - மேகம்போன்ற அழகையுடைய திருமாலே!. மகச்சாலையின் அகல் - யாகசாலையினின்றும் நீங்குவாயாக. தக்கீசி இங்ஙனம் கூறியதைக் கந்தபுராணம், தக்கயுத்தப்படலத்தாலுணர்க. கணிப்பு - அளவு. புக்கு - புகுந்து ஆய அகண அமர்ந்து அவ்வின் முதலானுயிர - ஆராயகின்ற உள்ளங்கள்தோறும் எழுந்தருளியிருந்து அகரவுயிர்போல முதற்பொருளாயினய. மிக்க விநாயகன் எனவும் இக் கவிநாயகன் எனவும் பிரித்துப் பொருள்கொள்க. நனை ஊறு-வருகின்ற இடையூறு. என் என்பது இன்மைப் பொருளில் வந்தது.

௪. வண்டு அகம் பாய - வண்டுகள் உள்ளிடத்தே பாயப்பெற்ற. கவுத்துவம்போலும் பாறு - கௌஸ்பது

மணியாகிய ஒரு சூரியனையணிந்த. மார்பான் - திருமால். நார் - அன்பு. ஆர் - நிறைவு.

௫. அருவம் - அருவத்திருமேனி. உருவம் - உருவத்திருமேனி. ஒரு தோன்றல் - சிவபெருமான். எனல் - என்று ஆகமங்கள் கூறுதலை. நாதம் - நாததத்துவம். அமர்தற்கு - அருவத்திருமேனிகொண்டு எழுந்தருளியிருத்தற்கு. மேய - அருவத்திருமேனியுடன் மேவிய.

௬. அரை - திருவரை, ஓர்எண். கால் - பாதம், ஓர்எண். காற்புலி - வியாக்கிரபாதர்; காலாற் புலியென்க. ஒருபாம்பு - பதஞ்சலிமுனிவர். மேக்கு - மேலிடம்; சடைமுடியில். திரை பயம் மாது - அலைகளையுடைய நீர்வடிவமாகிய மாது; கங்காதேவியார்; திரையையும் அச்சத்தையுமுடைய முதுமகளென்பது மற்றொருபொருள். அலைஇ - அலைந்து. கிழக்கு - கீழிடம், கீழ்த்திசை. இளங்கன்னிகை - சிவகாமியம்மை. இதில் முரண்தொடை யமைந்திருத்தல் பாராட்டற்பாலது.

௭. மாறு - கைம்மாறு. உடல் வளம் - உடம்பிறகேயுரிய வளம். மின் முன் ஊறு - மின்னல் முதலிய இடையூறுகள். இடையீடு - இங்கே சிலகாலம் பெய்யாதிருத்தல் உயிர்கள் வளமேவி. நடம் - தாண்டவத்தை. பெற - உயிர்கள் பெற.

௮. கரியவன் - திருமால். அவன் மனைவி - பூமிதேவி. வாதவூர்ப்பெரியர் - திருவாதவூரடிகள். சிவபோகமாகியமது.

௯. நூலளவை - ஆகமப் பிரமாணம். ஒருவருக்கா - திருவாதவூரடிகள் பொருட்டு. தலைச்சாத்து - தலைக்கட்டு; தலைப்பாகை. உரிய ஒரு பரி - வேதமாகிய குதிரை.

௰. கழுவாய் - பிராயச்சித்தம். அன்றிக்கழுவாய் வேறின்று என்னும் மறைக்கு. வாள்கைக்கொண்டு அறுத்துச்சிதையச்செய்த; “செருக்கொடுஞ்சிவ நிந்தைசெய் வார்க்கிலை தீர்வு” என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளைப்பார்க்க.

௧௧. அஞ்சு - ஞானேந்திரியங்களைந்தும். பிறகருவி - வேறு ஆயுதங்களை. நஞ்சு - விஷத்தை. மால் களிறு - கயமுகாசுரன். திங்கட் பிஞ்சு - இளம்பிறை; “மாமதிப் பிஞ்சுமிளை தேர்குயிற் குஞ்சுமுயிர் வாய்மடுத் துண்டொழிவதே” என்பது மதுரைக்கலம்பகம்; ௮௰. களிற்றை மாட்டி.

௧௨. புரமுதல் - திரிபுரம், காலன், காமன் முதலியோர். புகழ் - புராரி, காலகாலர், காமதகனர் முதலிய திருநாமங்கள். யானை - கயமுகாசுரன். அதனொடு - அப்புகழோடு. ஊர்தி - வாகனம். கயமுகாசுரனை விநாயகக்கடவுளுக்கு வாகனமாயினனென்பது புராணவரலாறு; “அத்திக்கிரங்கியருள் பதித்தூர்ந்த வகத்திய வாரணமே” என்பது மாயூரபுராணம். முன்னோன் - விநாயகர். பரவுற - கொண்டாட. சூர் - சூரபன்மன். அவற்றோடு - புகழோடும் வாகனத்தோடும். கேதனம் - (கோழிக) கொடி. மருந்து - சிவபெருமான்.

௧௪. முறையே அவற்றிகு எதிர்மறை - குறுமை, நெடுமை, இழிபு, உயாபு. எளமை - எளிமை. அரம - பாதாளம். என்னும - என்று பெரியோர்களால துதிக்கப்படுகின்ற. பெரியகடலைச் ஆசமித்தமையின், நெடுமையைக் குறுமை செய்தலும, குறிய தமது வடிவப்பொறையால தென்றிசையைச் சமமாகும்படி செய்தமையின, குறுமையை நெடுமை செய்தலும, மிக்குயாந்த விந்தமலையை அடக்கினமையின் உயர்பை இழிபாக்குதலும் திருக்குற்றாலத்தில திருமாலைச் சிவமாக்கினமையின் இழிபை உயர்பாக்குதலும் வெளியாயின.

௧௫. பாலை அளவில்லாத நாளுண்டு. ஆன் - பசு. தொறுவியர் -

இடைச்சியரை. பார்த்து உவந்த. மால்- கண்ணபிரான். அளவில்லாதநாண். ஆன்-ரிஷபதேவர். அளவு -கலந்த. நூலளவு ஒருநூல் - பலநூற்பொருள்களும் கலசப்பெற்ற ஒரு நூல்; தேவாரம். மேனன்மை யானை -வன்மையையுடையவனை.

௧௬. பாலிடை - பாற்கடலினிடத்தே. நூலிடை -நூல்போன்ற இடையையுடைய உமாதேவியாரை. ஓர்பாலவர்-சிவபெருமான். பாலிடை நஞ்சம் - சைனர்கள் பாலிற்கலந்து கொடுத்தவிடத்தை.

௧௭. உந்தி - கடல், ஆறு. மால் -இராமர். திருவையாற்றிற்குச் செல்லுகையிற் காவிரி வழிவிட்டமை இங்கே அறிபற்பாலது.

௧௮. இந்திபம் ஒன்றற்கா - நேத்திரேந்திரியத்தால் தரிசிக்கும் பொருட்டு. முருந்தன் ஏமாற. ஐந்தும் - ஞானேந்திரியங்கள் ஐந்தும்.

௧௯. ஆத்திமுதல் - ஆத்திமரத்தின அடியில. நிலையிலவா ஆததி - ஆதி; சிவலிங்கபபெருமான. திகழும ஆவின்பாலை ஆட்டி. பொல்லாத தியக்கமுள்ளது. அடி - தந்தையின் பாதத்தை. ஆததி - ஆபதி; உமாதேவியார். ஆததன - ஆப்தன்.

௨௦. செயற்கருஞ்செயல் - மாது சொன்னகுளால் இளமை துறந்தது முதலியன. பரிவு -அன்பையுடைய.

௨௧. குரவருளொருவன்-உமாபதி சிவாசாரியார். அவர்கூறியதை, திருத்தொண்டர் புராணவரலாற்றில், ௪௦-ம செய்யுளில் வந்துள்ள, "தொண்டர் சீர் பரவவல்லார்'என்பது முதலியவற்றாலுணர்க.

௨௨. தில்லைமூவாயிரவர்களைப் போல் இவர்கள் இத்தலத்தில் ஸ்வாமியைப்பூசிக்கும் குழாத்தினர்.

௨௩. எழாவகை - மனம் எழாத படி.

௨௪. இறையில் - இறைப்பொழுதில். அவை-மறையோதல் முதலியவை

௨௫. வந்து இவண் யாம் உறைவாம். இந்தத்தலத்தில் நந்தி தேவர் இலர்.

௨௬. ஆவடுதுறையில் தோன்றி. மாமலம் - ஆணவம. அடியை முடியிற் செறித்து:

௨௭. உணவு உதவுவேனென்று புகன்று இருததினேன். பொதவிலைவு- பசுஞானம். ஆரியன்பிசிக்கவுண்பான் என்பதை "அந்த மொன்றில்லா வானந்தம பெற்றேன யாது நீ பெற்றனை யென்பால" என்னுந்திருவாசகததால் அறிக.

அவையடக்கம்.

௨. தருதி என்ன - தருவாயென்று சொல்ல. புலம் - அறிவு.

௩. இறி - வஞ்சனை. ஒருவா-சாக்கியநாயனா. கலும-கலலையும. மேனி ஏற்றதை.

௪. நிலையது=நிலைஇயது - நிலைத்தது. எள்ளின் உலைவு இல நெய் - எணணெய். வேறொன்று- கணம்புல. தலை விளக்கு எரித்து உய்ந்தார -கணமபுல்லநாயனா.

௫. மணிமணி யாகத்தோன்றும் வாததை - திருவாதவூரடிகளுடைய சொற்கள. வறிய சொல - பொருளில்லாதசொல். உறகை - விண்வீழ்கொள்ளி; வானம விலக்கும்; வாவி போகரும்.

௬. மூவா - பிரமன்முதலியமும் மூர்த்திகள், சைவசமயாசாரியர். முடிவில் இன்பு

௭. மறையினும் - உருபுகள மறைந்தாலும் அந்த முறைதவறிய தொகை - உருபுகள மறைந்தபொழுது வேறு பொருள்படும தொகை.

௮. முடிய - முற்ற. மெய்ஞ்ஞானம் - மெய்மமையாகிய அறிவு நூற்பொருளை. பதி பசு வென்னும்

இரண்டனுள், பதி உணர்த்தும சித்து; பசு உணர்த்த வுணரும் சித்து. கொடியது என்றதற்கு எனது வாக்கு என்பது தோன்றாவெழுவாய்.

௯ ஞானன்மகாத ரென்றன்றிப் பொதுப்பட ஆன்ம நாதரென்னுந்திருநாமத்தைக் கொண்டிருத்தலின், ஞானமில்லாத என்னையும் ஆட்கொண்டருளுவாரென்றபடி. நாவலூரரா- சுந்தரமூர்த்திநாயனர், வெண்ணெய்-திருவெண்ணெய் நல்லூர். அன்று - அடிமையோலையைக்காட்டி ஆட்கொண்டகாலத்தில். 'அருச்சனை பாட்டே' என்றதை, "மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டனென்னு நாமம், பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க, அர்ச்சனை பாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச், சொற்றமிழ பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்" என்னும் திருவாக்கானுணாக, (பெரிய. தடுத்தாட். ௭௦)

## திருநாட்டுப்படலம்.

௧. சிமிழ்க்க - கட்ட. மேக்கும கிழக்கும் - மேலிடத்தும கீழிடத்தும்; சுவர்க்கத்திலும் நரகத்திலும். பவம - பிறப்பு.

௨. சூல் - கருப்பம். தலம் - திருப்பெருந்துறை.

௩. படியகத்தில் - பூமியில். அவிரும்படி - விளங்கும்படி. அரும்பு அன்பாம அடி - உண்டாகுகின்ற அன்பாகிய தன்மையையுடைய. ஒருவர் - வரகுணபாண்டிய தேவர். தன்னென்றது பாண்டிய நாட்டை. செய்தன்று - செயதது.

௪. குமரி — கன்னியாகுமரியாறு. பொருநை - தாம்பிரபர்ணி. வெணகுடினை - வெள்ளாறு. என்று, எண்ணிடைச் சொல. இந்நாட்டில குமரிமுதலிய ஆறுகள நான்கும அறமுதலியநால்வகைப் பொருள்களாகவும் விளங்குகின்றன.

௫. வலன - வெற்றி. வறபபவென்ற அடியையும முகிலை வென்ற முடியையும உடையதாகிய குலநகா - திருவாலவாய கோணை — மாறுபாடு, ஐ அசை.

௬. கம்பம் - நடுக்கம், ஞானம் உண்டாகியது. வமபு - கச்சினை. யானை - தெய்வயானை. ஓர்குன்று திருப்பரங்குன்று. நமமுடைய பந்தத்தை அறுப்பவன் - முருககக்கடவுள். இப்படலத்துள்ள ௪௬ - மபாடலைப பார்க்க.

௭. அடிப்பிணிப்பு - காலவிலங்கு. முன்பு உக்கிரபாண்டியரால் சிறையிடப்பெற்றமையின், மேகங்கள் அஞ்சின. சந்தம் - அழகு.

௮. பருவரை - பொதியில்மலை.

௯. சரியையாதி - சரியை, கிரியை, யோகம், ஞானம. சனனத்தெவ்வை - பிறப்பாகிய பகைவனை.

௧௦. இது, திருக்குறளில், நாடென்னும் அதிகாரத்துள்ள, "தள்ளா விளையுள்", "பெருமபொருளால்", "கேடறியா" என்னும பாடலகளின் பொருளைத் தழுவிவந்தது.

௧௧. துறை - வழி. முறை ஒலி - முறையான புகழை. புகழ் என் சொற்றொம். மறை ஒலி படு - வேதங்களின முழக்கங்கள உண்டா[illegible]தற்குக் காரணமான.

௧௨. சுரும்பு அலங்கல். உருப்பம நீங்கு - வெம்மை நீங்கிய. இந்திரநீலப பருப்பதம - ஒரு சிவஸ்தலம்.

௧௩. வேந்தன் - இந்திரன். கூனை - திரண்ட. முடியைச்சிதாத்தது, இந்திரன முடிமேல வளையெறிந்த திருவிளையாடல். புகழால் நீண்ட நாடு - பாண்டி நாடு.

௧௪. தருப்பம் - ஒருவகைத்தீக் குணம.

கரு. வேலை - கடல். வடுகநாயகன் - பைரவமூர்த்தி. மேனியை. வானர் - தேவர்.

கசு. இளையவன் - உபேந்திரர், திருமால். மகள்-பூமிதேவி. இடி பாம்பை அஞ்சச்செய்யும்.

கஎ. பருவம் ஆறு - கார்முதலியவை. பொருவு ஒன்றும் இல் அருள்- ஒத்ததற்கு யாதொருபொருளும இல்லாத அருள். செம்மல் பொழிந்தென.

கஅ. வள்ளியர் - வண்மையையுடையோர்; அவர்திறம் - கைம்மாறு கருதாமற் கொடுத்தல். ஒளித்தன்று - ஒளித்தது.

ககூ. 'நம்புனலெலாம்' என்பது முதலியன கடலின் உட்கோள். உண்டவன்-அகத்தியமுனிவர். பொதியில் அவருக்கு இருப்பிடம. ஆழி, எழுவாய். கவிழ்திறம - கவிழுகருந் திறம்; பொழியுமவிதம்.

உ0. நாணமுறநேரா விளர்ப்பர். அகை - வருத்தம. அவிதது விளர்தன.

உக. கலுழி - காட்டாறு. வனம் சாரதரை - முல்லை. ஓடை - நீண்டுள்ளது; நீர்நிலை.

உஉ. கயிரவப்பகை - சூரியன். குறள உ - குற்றியலுகரம்.

உங. மாட்சி கடுக்கும.

உச. அடுத்ததை - அடுத்தது, ஐ - சாரியை.

உரு. உடலூழ் - பிராரத்தம். ஊறறம் - ஊறுதல.

உசு. வாரி - கடனீரை. மழை - மேகம. தளிப்பணி - ஆலயப் பணிவிடை. வேமபுடையான் - வேபப மாலையையுடைய பாண்டியன்.

உஎ. நணபகல் - நடுப்பகல். உதித்து - தோன்றி.

உஅ. மாயகாரியப்பொருள்கள் - மணி, பொன முதலியவை. நவிலொணு இன்பமாய வான் பயன் - முத்தியின்பம்.

உகூ. படமாடம் - கூடாரம. விசிகயிறு - இழுத்துக்கட்டியகயிறு.

ங0. கவுணியர் - ஞானசம்பந்தர். தகைபோல் திகைத்து.

ஙக. ஐந்திணைவளம்- குறிஞ்சித் திணை முதலிய ஐந்திணைவளம.

ஙஉ. வரை பயந்தவள் - உமை. மான்மகள் - வள்ளி நாயகியாரை. வரை - கிரௌஞ்சகிரி. சேய்-முருகக்கடவுள்.

ஙங. பல்மரு - பலமரங்கள். வேங்கை மலரும, செண்பகமலரும் வணடுறைதவை.

ஙச. போகட்டு - போட்டு. இளைவு இல்லா - வருந்துதல் இல்லாத. தாம் தெரியாதவர்கள் இழிந்ததை உயர்ந்ததாகவும் உயர்ந்ததை இழிந்ததாகவும் எண்ணுவார்கள்.

ஙரு. கவணில் மணியைவைத்து. குரல் - (தினைப்) கதிர். ஒருபக்கத்துக்கயிறு அற்றகவணிற்குப் படப்பாம்பு உவமை.

ஙசு. நௌவூடும் குரங்கி - சந்திரன்; மானையுடையவன் என்பது பொருள்; குரங்கை யுடையவனென்பது மற்றொரு பொருள்.

ஙஎ. தெளித்தாங்கு - தெளிவித்தாற்போல. அடையுடுப்பார்- தழையாலாகிய வுடையை உடுப்பார்கள்.

ஙஅ. பிறையின் கோட்டினால் உடைந்த தேனடை. மதம் அருவி- தேனருவி. இது செந்நிறமுடையது- யானையின் கடாம-யானையின் மதம். இது கருநிறமுடையது.

ஙகூ. மந்தி - பெணகுரங்கு. கடுவன - ஆண குரங்கு. அந்தில் - அவ்விடத்தே. மற்றொன்று - வேறோர் ஆண் குரங்கு; மூத்த-உருமை. இவள சுக்கிரீவன் மனைவி. கவியிரண்டு- வாலியும் சுக்கிரீவனும்.

ச0. கயமுனிக்குலம - யானைக் கன்றின் கூட்டத்தோடு. கணம் - கூட்டம். அறை - பாறை. தினைக்குரல் - தினைக்கதிர். மறம் - வீரம். எயின்குடி - வேடக்குடி.

சக. கடமை - ஒருவகை விலங்கு.

காளத்தியா-காளத்தியிலுள்ள சிவ பெருமான். இவர், இறைச்சிகளைத் தேனிற்றோய்த்துக் கண்ணப்பநாய னார் அருந்த உண்டருளியது இங்கே அறிதற்பாலது.

௪௨. யானைக்கோடுகளில் முத்து ண்டென்பர்.

௪௩. பிண்டியந்தளிர்-அசோகந் தளிர். ஆரம் - சந்தனம். இரத் தல் தலைவர்களின் தொழில். கொள் வார் - கொள்ளும் தலைவியர்கள்,

௪௪. எறும்பும் அல்லாத உயிர் களுமாகிய யாவும். குறும்பலாவுடைக் குன்றம் - திருக்குற்றாலத்துள்ள திரி கூடாசலம். இது, பாண்டிநாட்டி லுள்ள ௧௪ தலங்களுள் ஒன்று. தெறுகின்றநாகனையும் ஆயிரம் வா யினையுமுடையவன் - ஆதிசேடன்.

௪௫. வானமேவிய வாழ்க்கையர் -தேவர், புளிஞர் - வேடர்கள். கொ டுங்குன்றம் - பிரான்மலை. ஏனம் நாடொணார் - ஆதிவராகத்தால் தேடி யறியப்படாத சிவபெருமான். ஆங்கு ஞாலம் முன்காட்டி யிருப்பின் - அவ் விடத்தே பூமி, அந்தரிக்ஷம் சுவர்க் கம் என்னும மூன்று இடங்களைக் கா ட்டி எழுந்தருளி யிருப்பாராயின். இம்மலையில் பூமியிலிருந்து மூன்று சிவசந்நிதிகள் உள்ளன. மானம் - பெருமை.

௪௬. சூர - சூரபன்மன். இறை வன் - முருகக்கடவுள். யானை தோள் - தெய்வயானையாருடைய தோளை. திருப்பரங்குன்றம், தெய் வயானையாரை முருகக்கடவுள மணஞ் செய்தருளிய தலம.

௪௭. மான் -மாரீசனாகிய மானை. வாளியால் தப்ததானெனினும்என்க. மான் உருத்தழூஉம் - திருமகளாகிய மானின் வடிவத்தைத் தழுவிய. திரு மகள் மான் வடிவமுற்றிருந்ததை கந்தபுராணம் வள்ளிநாயகியார் திரு மணப்படலத்தால் உணர்க. மாலை -திருமாலை. மான் உருத்தகான் - மா ன்கள் அழகு பெற்ற காடாகிய முல்லை நிலமானது.

௪௮. வனம் - துளசி. துளசி யால் திருமாலுக்கு மயக்கம் நீங்கின மைகந்தபுராணத்தால் அறியப்படும. மீப்பாய - மேலே பரவிய. படாந்து -நினைந்து. அவண் - அவ்விடத்தே.

௪௯. தேரிலுள்ள அசைந்தாடு மாலைகள் சரக்கொன்றைப் பூங்கொத் திற்கு உவமம். மதலை - கொன்றை. கூவிளம் - வில்வம். ஓதிமம் - அன் னம். இப்பறவை மருதநிலத்திற்குரி யது.

௫௰. மூவகைத்தொழில்-படைத் தல் காத்தல் அழித்தல். இடைத் தொழில்-காத்தற்றொழிலை. தேவன்- திருமால். ஆவயின் - அவ்விடத்து. தோழம் - பசுக் கொட்டில். தீவு - இடங்கள். பரப்பிச்செறிவர்என்க.

௫௧. புதல் - சிறு தூறுகள். கலை யத்துப் பால்பாயுமோதை - பசுக் கறக்கும் ஒலி.

௫௨. முளிபடூஉ - காய்ச்சப் பட்டு. பெருகு - தயிர். வெருகு - காட்டுப்பூனை. யந்திரம் - வண்டி முதலியவை.

௫௩. வேய்ங்குழல் - புல்லாங் குழல். ஏறு - இடபம. பனித்த - குளிர்ச்சியைச் செய்த. மௌவல் - முல்லை. வில் - இந்திரவில். தொ ழிப்பு - முழக்கம். தனித்தமங்கை யர் - கணவனை விட்டுப் பிரிந்தோர். மகளிர் தனித்திருத்தல் முல்லைக்குரி ப்பொருள். இருக்கை சாய [illegible] இருத் தலைக் கெடுக்கின்ற.

௫௪. நகையரும்பிட - பற்களைப் போலவே தோன்ற. குழல் கனிந் திட - கூந்தலைப் போலவே பழுக்க. களவு - களாச்செடி.

௫௫. குறும்பொறைநாடர்-முல்லை நிலத்தலைவரின். இமிலுகுத் தோ ளிணையுயர்ந்தன, கொங்கைகட்கு அவை ஒத்தனஎன்று சொல்லும்படி.

௫௬. இறுங்கு - சோளம். முற் கம் - பயறு. கோத்திரவம - வரகு. புல் - கம்பு. கானகத்தில்வரை நண

ணிய வென்ன.

௫௭. குருந்து - குருந்தமரம். தூர்வை - அறுகு. ஆனின் ஐந்து - பஞ்சகவ்வியம். இன்களம பழம் - இனிய களாப்பழம்.

௫௮. பூவை - காயா.

௫௯. நானம் - புழுகு. தானப் பேரரசு - இந்திரன். வான் அப்பு ஏர் முடியாய் - ஆகாய கங்கையை அணிந்த சடைமுடியை யுடையீர். கானப்பேர் - காளையார் கோயில். புறவம் - முல்லைநிலம்.

௬௰. ஆடானை - திருவாடானை.

௬௧. புத்தூர் - திருப்புத்தூர். இத்தலத்தில் பிரணவம் தன் பொருள் சிவபெருமானே என்பதை அறிவிக்க வேண்டித் தவம்செய்து கொன்றை மரமாகிச் சிவபெருமானுக்கு நிழல் செய்கின்றது என்பது புராணவரலாறு.

௬௨. அகரு - அகில். ஒருவரை - பொதியில் மலை. வாரி - கடலின்.

௬௩. குறள் - பூதம்; குண்டோதரன். நீர்நசை - தண்ணீர்த்தாகம். அழைத்தவாறு - அழைத்தபடியே.

௬௪. செங்கையின் ஆடலகொண்டார் - திருவாதிரை நாளில் தாண்டவமாடியருளிய சிவபெருமானது; கையால் ஆடல் கொண்டாரென்பது மற்றொருபொருள்; "செங்கையாட்டினோ" (நைமிச.) என்றார் திருநாகைக் காரோணப் புராணத்தும். வெள்ளாறு — தென்வெள்ளாறு.

௬௫. மதகின் ஊடு. வெள்ளம் காட்டிற்று

௬௬. கொள்கைக்கு - கொள்ளுதற்கு.

௬௭. சாதி - கள், ஜாதி. பழையர் - கள்விற்போர். மூவா - பரசுராமன் முதலியவர். அலம் - கலப்பை.

௬௮. ஏர்க்கால். நததம் தக - இருவையொப்ப. தாழவு உயர்வு. முட்கோல் - தாற்றுக்கோல்.

௬௯. புரத்தல் செய்பவன் - திருமால். பாங்கு - அழகு. முன் ஏர் நடக்கும் உழு வினைப்படைச்சாலை மாய்க்கும் தரத்தது பின் ஏர்.

௭௰. குறிகொள்ளும்பகடு - குறித்துக்கொள்ளும் எருமைக்கடா. நாஞ்சில - கலப்பையின. ஊழ்த்தல் - பதனழிதல்.

௭௧. தழைதரல் - செழித்தல், தழைகளைத்தருதல். கங்கு - வரம்பின பக்கம். பழையது ஈது அகரு (அகில்) தேய்த்தபான்மையது.

௭௨. கரம்பு - தரிசுநிலம். அவல் - பள்ளம். பரம்பு - ஒருவகைப்பலகை. தோடம பாறியநாளில் - தோஷம் நீங்கிய நாளில். வரம்பு - வரப்பு, அளவு. நிரப்பு - தரித்திரம்.

௭௩. சேய் - பிள்ளை. விலங்குறு - விலகாத. குலம் - கூட்டம், உயர்வு. கூழ் - பயிர்.

௭௪. நாறு - நாற்று. விழைய - ஒப்ப.

௭௫. பிழி - கள். "மீன்கணினைவுமவெற் றிடங்க ளினமையால்" என்பது சிந்தாமணி. ஆற்றுக்காலாட்டிமார் - உழத்தியர். நாற்றுக்களைச்சாய்த்து நடுவது மரபு. சாய்வு - மெலிவு. நிமிர்ந்தவை, நாறுகள்.

௭௬. சரோருகம் - தாமரை.

௭௭. களைகளைக் களையும் காலம். தளை - வயல். விளையும் நடையை.

௭௮. 'சிறியபகையேனினுமோம்புதறேறலா, பெரிதும் பிழைபாடுடையார' என்பது, நீதிநெறிவிளக்கம். அலலார் - பகையை ஓம்பியவர். தாமரைப்பூ திருமாலின உந்தியாயும். நள்ளா - நட்புக்கொள்ளாத, ஒவ்வாத.

௭௯. தோட்டி - அங்குசம் வெள்ளாம்பல் - ஒருவகைமலர், வெள்ளையானை. கைவால் - கையாகிய பாணத்தால். தாமரை - ஒருவகைக்கொடி, தாவுகின்ற மரையென்னுமிருகம். புல புறகள, புலி. அங்கிரி - பாதம், அழகியமலை.

௮௰. புண்டரீகம் - வெண்டாமரை. கோகனகம் - செந்தாமரை.

கரைகின்ற - சொலலுகின்ற. கொடிய-கொடிகளாக உள்ளன, கொடுமையையுடையன.

அ௨ வினை அமைபவர் - தேவர். சூர் - சூரன். பயிர் - நெற்பயிர். பிணைத்தல்-கிளைத்தல். கழைகொல்-மூங்கிலோ.

அ௩. வயிர ாட்டிபோலும் தோற்றத்தைக்காட்டி வெளிப்பட்டு. மதிவிடுகதிர்-சந்திரிகை. நிமிரச்சாய்ந்த.

அ௪. கொல்லரம் - கொல்லனது அரம். கொடுமபிறை இரும்பு - அரிவாள். சொல் - நெல். தூர் - அடி. வரிந்து - கட்டி.

அ௫. பிணையல் - பிணைததல்.

அ௬. ஊர்தரும் இறைவன - யமன், கடா, எழுவாய், வை, பலாலம் - வைக்கோல்.

அ௭. ஆறில ஒன்று கொற்றவன் கொளக்கொடுத்து. தொன்று - பழமை. ஆர்ப்பு செய்யும்.

அஅ. கழை - கரும்பு. வடிக்கும் சாற்றை. அரிசனம்-மஞ்சள். புழை மனம்-உள்ளீடில்லாத மனம். உழை-மான்.

அ௯. இறை - சோமசுந்தரக்கடவுள். ஆடல் எட்டெட்டு - சுச திருவிளையாடல். எவர்க்கும - எலலாமூர்த்திகளுக்கும். மூர்த்தி மூளைதமை. "மூளைதானை யெலலாககு முன்னே தோன்றி" என்னும திருவாக்கால் விளஙகும்.

௯0. பொன் போல்வாள்-பொன்னனையாள். வணணமாலை எவாகக் கொணடவா.

௯௧. எட்டை அகத்தே கொண்டதாய எடகம்-திருவேடகம். மூன்-முதலிய தலஙகள். கூடிய அகஙகொணட. மெனபால — மருதம்.

௯௨. கடலுக்கு நதிபதியென்று ஒரு பெயருண்டு.

௯௩. சுறுமருப்பு - சுறுமீனுடைய கொம்பு. கோட்டினின்றும-அக்கொமபினின்றும்; சுறுமீனகொமபில் வருணனைப்பூசிபபது நெய்தனிலத்தார் மரபு. திருவம - செலவத்தை.

௯௫. படருற- துன்பமுற. பகன்றை- புலிநகக்கொன்றை. இதன் பூவிற்குத தூண்டில் உவமை.

௯௬. இறையவன் - பரமசிவன். மொய்த்த பலவகையான புலால் நாற்றம் மாறும்படி.

௯௭. பிணடிவைப்பு - குறிஞ்சி. முல்லைவைப்பு - முல்லை. நீலம் - கருங்குவளைப்பூ; இஃது ஐந்து பாணஙகளுள் கொலைப்பாணம.

௯அ. துகிர் - பவழம். நாகங்கள்- புன்னைகள். புன்மையடைமொழி, 'புன்னாகம என்னும் பெயரில் உள்ளதாகக் கொள்க.

௯௯. ஆர் ஒலி - நிறைந்த ஒலி. நாவாய் - கப்பல், நாவையுடைய வாய்கள்.

௪00. முண்டகம் - தாழை. உல்லம் - ஒருவகை மீன்.

௪0௧. நன்கு அல்லது - தீயது.

௪0௨. மருநிலம - பாலை. உமணா - உப்பளப்போர். உப்பின் ஓஙகல - உப்பின் குவியல்.

௪0௩. கடலாலும, கேணியாலும, நிரனிறை.

௪0௬. கொற்றி - தூர்க்கை.

௪0௭. மாலை - இயல்பு. வேலையில. விறறது - விறலையுடையது.

௪0அ. ாந்து - ாசசுநதோகை. குரமபை - குடிசை. புள்ளுவர் - மறவா. விந்தை - சீரலக்ஷுமி நீஙமைய ராய் வாழகுவா.

௪0௯. இறுககா - பாலைநிலமாக்கள். புரு - தூதுணம புரு.

௪௧0. ச சுரம - பேரீந்து. பாடலம - பாதிரி. தொடுதல் - தோணடபபடுதல்.

௪௧௧ இவா சும்பந்தம் - எறும் சமபந்தம. வேபப மாலை பாணடிய ர்களுக்கு உரியது. அந்தநாயகன் - பாணடியன். ஸ்ரீவரகுணபாணடியதேவா திருவிடைமருதூரில் வேப்பங்கனிகளைச்சிவலிஙகங்களாகப் பாவிதது

அம்மரங்களுக்கு விதானம் கட்டுவி த்த அருமைச்சரிதை இங்கே அறியத் தக்கது; "வேம்புகட் கெல்லாம் விதான மளித்தும்" என்பதனாலும் அறிக; இது, திருவிடை மருதூர்மும் மணிக்கோவை.

ககஉ. எருவை - கழுகு. பொருள் கருத்துறப்போமவா - பொருள் வயிற் பிரியும் ஆடவர். செலவு அழுங்குவிக்கும் - வருந்தச்செய்து, செலவுதலைத் தடுக்கும். கெட்டராககள் - நீண்ட பாம்புகள். புரி - வைககோற் புரி.

ககங. கன்னிகாரம் - கோங்கு. பஞ்சிகள் - பஞ்சுகள்.

ககச. ஊறந்து - மிகுந்து. பாலைகள் - பாலை மரங்கள். இப்பழங்கள், உணபவர்களின் உதடுகளை ஒன்றோடொன்று சேரும்படி செய்யும். அதரம - கீழுதடு. ஓட்டம - மேலுதடு.

ககரு. மால் அயன் நாடியது, அச்சிவிமலையை முன்னின் இகழார். மயக்கம் - கலப்பு.

ககசா. பாகல - பலா. கறி - மிளகு. கானவாரணம் - காட்டுக்கோழி.

குறிஞ்சியும் முல்லையும் மயங்கினமை கூறப்பட்டது.

ககஎ. ஆன் குழக்கன்று - பசுவின் இளங்கன்று. அலலகம் - பள்ளத்தினிடத்தே. உலகெடுத்துச் சொல்லுவது, "பழம் நழுவிப் பாலில் விழுந்தது" என்னும் பழமொழி. முல்லை மருதங்களின் மயககம.

ககஅ. முணடகம் - தாமரை, தாழை. தையல் - அழகு. புதுக்கடி - புதுமணம. மருதம், நெயதல் இவற்றின மயககம.

கககூ. வயலைக்கொடி - பசலைக்கொடி. நெடி - ஒருவகை வண்டு. பூவை - காயாமரம். இதறகுத திருமால் உவமம். நெய்தல், மருதம, முலலை இவற்றின் மயக்கம்.

கஉ0. வேழம் - யானை. ஆன் - பசு. இடல் - இடுதல். மதூகததலர் - இருப்பைப்பூ. கறை - உரல். கரும்பு மருதத்திற்கும், யானை குறிஞ்சிக்கும், பசு முல்லைக்கும், இருப்பை பாலைக்கு முரியன. இஃது, ஐந்திணை மயக்கம் கூறிற்று.

## திருநகரப்படலம்.

க. தேசு - ஒளி. வீசுதல் - கொடுத்தல. விண்டு - திருமால.

உ. பொலி பெருந்துறை.

ங. பாடும எல்லை - சொணடாடப்படுகிற தலத்தின் எல்லை.

ச. விமானம் - தேவாக்குரியன. உண்ணு - உணடு. அளி - வணடு.

எ. மதிசெய் - சந்திரனை யொத்த. வெளளை நதி - வெள்ளாறு.

கூ. ஆசை - விருப்பம், பொன். வெறுக்கை - வெறுப்பு, பொன.

க0 சிறுதுறை - சிறுவழி.

கக. குரவு - ஆசிரியத்தன்மை. புரவு - காத்தல். குரவு ஏற்று.

கஉ. கதி - முத்தி.

கங. மணி நிறத்தவன் - நீலமணி போன்ற நிறத்தையுடைய திருமால. படலை - மாலை.

கச. அவை - அம்மாஙகனிகளை.

கரு. திரையலின் கொழுந்து - வெற்றிலைக் கொடியின் கொழுந்து, அலையின் கொழுந்து; அல்லும இன்னும் சாரியைகள. சிந்நதி - வெள்ளாறு.

கசா. நிலாம் - விளங்கும். இலாங்கலி - தென்னை. அஃது - அம்மறைப்பினை.

கஎ. தாய் - தாவி. வலிமுகம் - குரங்கு. ஆவி - தடாகம். அதனை - அவ்வாவியை. தாவிச்செய்வது.

கஅ. கந்தியஞ்சூழல் - பாக்குத் தோட்டம். கூன் உறல - மந்தாயின கூன்முதுகை அடைதலை. அலை கருவிலலும, பாககுப்பழத்திற்கு மண் உருண்டையும், வாழைக்குலைக்கு மந்தையின் கூன்முதுகும உவமைகள்.

ககூ. தேத்தடை - தேனடை. வளை - சங்கு.

உ0. நால்வகை மலர்கள், கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ. மலர்கள் தேவர்களுக்கு இருப்பிடம். வண்டுகளுக்கு அசுரர்களுவமை.

உக. மூவகைநகர்-புறநகர், இடைநகர், உண்ணகர். படை - சேனை.

உஉ. கோடு - சிகரம், கொம்பு. மணி - ரத்நம், ஒலிக்குமணி.

உங. புகர்முகவரை — யானை. கண் - இடத்தே. உறை - துளி. மூவகை-மும்மதம், மூன்று நீர். பிறை உணர்ச்சியர் - பிறைபோல வளரும் அறிவினை உடையார். வாரி - கடல், யானைக்கூட்டம்.

உச. கடாம் - மதம்.

உரு. தொடர் - சங்கிலி. பன்முறை காலெழும் செவி. கால்-காற்று. எதற்கு - எதனபொருட்டு.

உசு. மருவலர் - பகைவர், மணத்தையுடைய அலர். வால்நகம்-வெள்ளிய நகங்கள். கயங்குற -கசங்குற. நிரியாணம் - கடைக்கண்.

உஎ. பரியென் -சுமப்பாயென்று. அரி புணர்ச்சி மெய் -திருமால் புணர்தலையுடைய மெய்; பூமியினுடம்பு.

உஅ. முரணுடைத்து, கா-லுக்கு.

உகூ. பூப்பு - பூத்தல். பாடலம -பாதிரி. கந்துகம - பந்து. குதிரைக்குக் கொக்கு, பாடலம, கோரம், கந்துகமென்று பெயர்களுண்டு.

ங0. உருவை. ஆதிநூல் - வேதம். இளைதத திங்கள் - பிறை. அதன் மிசை- அவ்வேதக்குதிரையின் மேலே. அம் கள் மாலையான் - பரமசிவன.

ஙக. குரம் - குளம்பு. உகைக்கும - செலுத்துகின்ற. * தன்மை இல்லாத. மந்திரம் - குதிரைப்பந்தி.

ஙஉ. உதன்மிசை - அதனமேல். மேதகம்- கோமேதகம. பிருதவிமுதலிய ஐம்பூதங்களினிறம முறையே பொன்னிறமுதலியன.

ஙங. வெற்றம் - வெற்றி சயந்தனம - தேர் -தேர்க்காற்கடுப்பு-தேருருளையின் வேகம. காறகடுபபு-காற்றின்வேகம். அரைக்கால் - ஒருசிற்றெண்.

ஙச. சூரியனது தேர்செல்லுதலை மட்டு முடையது; இததேர் செல்லுதலையும மீளுதலையுமுடையது.

ஙரு. வியாளம் - பாம்பு; ஆதிசேடன். எய்த்து - அறிந்து. நுதலி - நெற்றியை யுடைய சிவபெருமான்; அவரது தேர - பூமி.

ஙசு. துவையல் - துகையல்.

ஙஎ. இதனமுதலடி, "விழிதத கண வேலகொண் டெறிய வழிததிமைப்பி, னொட்டன்றோ வன்கணவர்க்கு" என்னுந்திருக்குறளின் பொருளையுடையது. கள் நிவப்புறு. கண்ணி - கருதி.

ஙஅ. மாசை நேர்வது - குற்றத்தைத் தருவது. தேசை - ஒளியை, ஈசை - அமபிகை. இளமூனை - முருககடவுள்.

ச0. தோற்றுநர் - தோன்றச்செய்பவர். மூனைய - கூர்மையையுடைய.

சக. பசல் - பகறகாலம. ஒருவ- (ஒலியை) நீங்க.

சங. பற்ற ஆம் நளி. தோம் அறற.

சச. சற்றே கையை நீட்டி. பாடு, பீடு - பெருமை.

சரு. பல வில-பலவகையொளி. நபச்சுரபி-காமதேனு; நபம-ஆகாயம

சசு. கொடிய - கொடிகளையுடைய. மகவாக்கம் - புத்திரப் பேறு; "அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார், வழுக்கியுங் கேடீன பது" என்பது திருக்குறள்.

சஎ. முகை செய - தோன்றுதலைச் செய்கின்ற. முறி - தளிர். உகைததல் - செலுததல்.

சஅ. கையதாம் - தூய்மையையுடையதாகிய. மை அளாவலால.

சகூ. உட்சோல - உள்ளததைச் சூழ. ஐங் கோலன்-ஐந்து அமபுகளையுடைய மன்மதன். தக்கோலத்தை மென்றவளுய். குறுங்கண -சாளரம்.

ரு0. இலக்கம - லக்ஷ்யம், அலக்

கண் - துன்பம்.

௩௧. ஆகாயத்தைப் புகைநிற முடையதென்பர்.

௩௨. மூலலே - கற்பு பங்கம் - குற்றம், சேறு.

௩௩. துணை - ஒப்பு. தமிழ் முனி - அகத்தியர். வரை - விந்தியம்.

௩௪. தாமரைப்பூ வேதியர்க்குரியது.

௩௫ ஆவிவாய் - தடாகத்திலே. எவின் - அமமைப்போலவே.

௩௬. கிள்ளை - கிளி, கிள்ளுதலை. அம்கையா.

௩௭. வேட்டு - விவாகம செய்து. உலாவுதல் - பவனிவருதல. நறு மொறுப்பன் - பொறுமையை அடைவன்.

௩௮. பூ வண்ணத்தொடை - பூ வாலாகிய அழகியமாலை.

௩௯. கண்டும் - கற்கண்டும். தேம் - இடம்

௪௦. நியமம் - நியதி, வீதி.

௪௧. கடை - முடிவு.

௪௨. குசை - தருப்பை. தாழ்ந்த - பொருள ஆழந்த. வீழ்ந்த - விருமபிய.

௪௩. பண்ணிய - பணணுக.

௪௪. குடிக்கும் - குடிப்பான். தெவ் - பகைவனுகிய இந்திரன. சேரிய - சோதறகு.

௪௫. ஆதியாகியவீ வெளியுற. காமம - முதலை. உடு - அகப். அகததே நலததையும புறததே தீய வேடததையும ஏற்றபுததா - சாக்கிய நாயனா.

௪௬. கொடியது - கொடுமையை யுடையது, கொடிகளையுடையது. கோணை - மாறுபாடு; ஐ-சாரியை. சால் -மிகுதி. பொறி -யந்திரங்கள. கடியது - காவலையுடையது.

௭௦. பொறி - இந்திரியங்கள், யந்திரங்கள். பகைப்புலம்- பகைமையையுடைய விஷயங்களை;பகைவருடைய இடங்களை.

௭௧. அதிரவு - நடுக்கம. மூடுறுப்புதவு - மூடாததவு.

௭௨. ஒரா - நீங்காத.

௭௩. அணியல் - மாலை. கண் ஆடிலே. சுவாபபுறம் நிற்ப. படர்ந்தது- வந்ததை.

௭௪. தகைத்திறம்-தகுக்குந்திறம்.

௭௫. மூரிநீா- பெரியநீரையுடைய கடல்சூழ்ந்த. பெட்டு - விரும்பி.

௭௭. வன்னி- நெருப்பு. காமத்தீ, நீங்கிற் சுடுமென்பதை, "நீங்கிற றெறூஉங் குறுகுங்காற் றண்ணெனூந் தீயாண்டுப் பெற்றாளிவள்" என் பதனாலறிக.

௭௮. தருமம், வாருணி, முத்தி இவைகள் பொதுவாதலறிக; வாருணி வாரரால் உண்ணப்படுவது; குளம்.

௭௯. குலமகளிர் கருவுயிர்த்திருத் தலையும் பூத்திருத்தலையும் பரத்தையர் சேரியிலுள்ள தலைவர்க்குத் தெரிவிக்கவரும்மகளிர் முறையே வெள்ளணியையும செவ்வணியையும் அணிந்து வருதல்மரபென்பா. பூந்தளி மங்கையர்-நாமகளும் திருமகளும்.

௮௦. வேர் - வியர்வை, தெய்வ மகளிர்க்கு ஆடை அழுக்குறாது; வியர்வையுண்டாகாது, மாலை வாடாது. புவியகததரம்பையமார் - பூமியிலுளள தெய்வப்பெண்கள்.

௮௧. பூசுரா - பூமியிலுள்ள தேவா.

௮௨. வேளாளா-கங்காகுலத்தார்,

௮௩. மூளகா - கீழமக்கள்.

௮௪. வேளாளர் விருந்தை ஓட்டு வரிலராயின. இச்செய்யுள், "பெயற பான் மழைபெய்யாக் கண்ணும்" என்னும நாலடியாரின் பொருளை உட்கொண்டது.

௮௫. வேளாளா நீலோறபலமாலையையுடையா.

௮௭. கமலராகம் - பதுமராகம; மாணிக்கம. விததுருமம - பவளம. வலன் அவிநததேம்- வலாசுரனிறநத இடம்;இறந்தபின் தன்னுடைய உடம பிலிருந்து நவமணிகளும் உணடாக

வேண்டுமென்று-இவன் வரம்பெற்ற வன்; திருவிளையாடல் மாணிக்கம் விற்றபடலம் பார்க்க.

அஅ. இனம சுட்டலாவது, 'பய றுளதோவணிகிர்'என்பார்க்கு அஃதி ல்லையாயின், 'உழுந்துண்டு' என்றல். கேட்டபொருளையேகொடுப்பாரென் றபடி. இம்மி-ஒருவகை அரிசி; சிறிய தோரளவு. கதவுதல்-கொள்ளுதல்.

அகூ. அள்ளுநாள்-கொள்ளுநாள்.

கூ0. உயிரவரினுககுறண மெய்வி ட்டோடலைக்கறபவர். 'நம்தொழில்' என்றது, சிறிதுகொடுத்துப் பெரிது கொள்ளுதலை.

கூக. தோன்றலில் - தோன்றல் விகாரத்தில். தாளினுல் திருஆதும்.

கூஉ. அவர்திருவை. மண்- மண் ணில். ஆண்டு- ஆட்கொண்டு. பெரு மனின்-சிவபெருமான்போல.

கூங. நகம் - மலை. இகவு-இகத் தல்; நீங்குதல்.

கூச. வண்டு – அம்பு. பகை வரைத் தேவராக்குவார். 'கண்டுநேர் -கற்கண்டை ஒத்த.

கூரு. அரியுகைப்பவள் - தார்க் கை. அம்புயம-அழகியபுயம. பரிகஙிரி -தேர்.

கூசு. ஓடலும் வாடலுமுள்ளபகை வா இழிந்தவா.

கூஎ. மறைக்கொடி - வேததத்துவ சம.

கூஅ. சாலை ஊட்டலால்.

கூகூ தங்கள் நெஞ்சில. சுதம - அழிவு.

கா00. கொற்படை - கொல்லு தலையுடைய படை. பெர்றபு அடை.

கா0க. கற்பிற்கு அழல் உவமை; 'தழலோவென்னுங் கற்புடையதனி நாயகி" - (பாரதம், சூது. உஉக).

கா0உ. பொறை - பொறுமை. ஆன்மார்த்தபூசை, பரார்த்தபூசை.

கா0ங. மறைமுடி - உபநிடதம். இறையும் - சிறிதும.

கா0ச. மூவகைத் தீக்கை-சமயம், விசேடம், நிருவாணம். பாவனம் - பரிசுத்தம.

கா0ரு. சவிமுன் நால்வர் - சவி, சமகன், வாதி, வாக்கி.

கா0எ. மூரிவு - ஓடிதல். மூரல்- அன்னம். கருனை - பொரிக்கறி. பாகு - குழம்பு. பரிவு - அன்பு.

கா0அ. தெவ்வி-கொண்டு. நிறை தோறும் - சால்கள் தோறும். இலிகு சம் -எலுமிச்சை. வாக்கி- வார்த்து. ஓர்கனி - நெல்லிக்கனி.

காகக. கோடிய-வளைந்த.

காகங. கோள்கள் சமமதிலென.

காகரு. ஞானம் ஐந்தாவன: ஞான நூலை ஓதல், ஓதுவித்தல், அதன் பொருளைக கேடடல், கேட்பிததல், சிந்திததல்.

காகஎ. அருவென - அருபமாக. நளளிய - நள்ள; பொருந்த-

காகஅ. கதிர் - சூரியன்.

காககூ. ஆவி-புகை. தாய்- தாவி.

காஉ0. முறை - முறை[illegible].

காஉஉ. அறுபகை - காமமுதலிய வை.

## நைமிசப்படலம்.

க. மநதிரிப்பவர் - ஜபிப்பவா கன்மத்தைத் திரிப்பவா. சுமந்து இரிப்பவா. மந்திரிப்பவா-மந்திரியா கிய பிறப்பையுடையர்; பவம்-பிறப்பு.

உ. மந்தி - வண்டு ஒருவன் - பிர மன்.

ங. வந்து வழங்க. எந்திடத்து- எந்த இடத்து. அந்தஇடதது. நந்து- சஙகு-

ரு வயங்குவாய, விளி.தேம் - இடம விராவி இசைப்பாய்.

சு. எகின்கொடி -அன்னக்கொடி. நேமி-வளையம.

எ. அருள்திறங்குறித்து. வருட்டி (=வருடி) - தடவி.

அ. உதக்கு - வடக்கு.

கூ. மணிமார்பினன் -திருமால்.

க0. அகைக்கும் - வருததுகின்ற.

முகைக்கும்-தோன்றும். அரசுஅவண அமர்ந்து. உகைக்கும் - செலுத்தும்.

கஉ. சிருக்கு - வேள்விக்குரிய ஒரு வகைக்கருவி. வென்று முதுகு. ஒருரு எய்தின் - சாரூபந்தனைந் அடைந்தால். தழால-தழுவுதல்.

கங. தாமரைக்கு நாயகன் - சூரியன். சரு - தேவருணவு. குமுதநிரைக்கு நாயகன் - சந்திரன்.

கரு. அருகுதீர் - சுருங்குதலில்லாத. யாகாக்கினியின் கொழுந்தால் தேவருலகம உருகி வீழாதிருத்தற்பொருட்டே மேகத்தையும் ஆகாயகங்கையையும் கீழேயிருக்க அமைத்தனர்.

கசா. யோகப்புகையால் மேகங்களும் அவற்றின் சம்பந்தத்தால் கடலும் கறுத்தன.

கஎ. நாதம - ஒரு தத்துவம். போத ஆம் - மிக ஆகிய. இதிலுள்ள முனிவர் அடிசிலுண்ணு திருத்தல், இங்கேயுள்ள பலாக்கனி முதலியவற்றின் சுவையை நினைந்தே.

கஅ. சுதரிசனம்- நல்ல தரிசனம், சக்கரம். தண்மைதவா.

ககூ. ஒரு முனிவரன்-துருவாசர். உறந்து - மிகுந்து. ஒருவன்-கண்ணபிரான். கற்பகவனத்திலும் இது சிறந்தது.

உ0. பன்ன - சொல்ல.

உக. வமனபதம - வாந்திபண்ணினசோறு. இந்திரன் முதலியவர்களின் பதவிகளை மதியாதவர்கள. அருட்பவா - திருவருளாலுண்டானவா.

உஉ. எதிர்மறை -துன்பம. உடலூழ் - பிராரத்துவம். வரை - மலை. நன்பயச்சுரதேனு-நல்லபாலையுடைய காமதேனு.

உங. முடிய - முற்ற.

உச. அருட்குறி - சிவலிங்கம். நிகமம - வேதம். பவஞ்சம் - பிரபஞ்சம்.

உரு—ஙஉ. முனிவர்களுடைய பெயர்கள்.

உரு. சுதீக்ஷ்ணா.

உசா. அரபத்தர். தோண் இரண்டு காலினன் - அஷ்டகோணமஹாருஷி. மாண் இரப்பியர்.

உஎ. உரோமசர்.

உஅ. கூஷ்மாண்டர் தாலப்பியர். அசிதா. சித்திசால் சித்தி மிகுந்த. அகமருஷணர்.

உகூ. வல்ல சுகர். ததிசிப்பெயரை ஆள்பவர். நல்ல சனாதர். நகு சாதர்.

ங0. கலைச்சிருங்கண்- கலைக்கோட்டு முனிவா. நாரதர். ஒற்கமஇல் - வறுமையில்லாத. தூமபாணர்.

ஙக. முதுபுலம்-பேரறிவு. மொழி- சொல்லப்படுகிற. உக்கிரவீரியர். விதுமுடி- சந்திரனை அணிந்தமுடியையுடையவர்.

ஙஉ. சவுபரி. பருப்பதன் - பர்வதமுனிவர். ஆசுவலாயனர். காலவர். திரணவிந்து.

ஙங. இமவரைத்தோன்றுகொடி- உமாதேவியார். உறந்த- மிக்க. ஓரியாகம்-தீக்கசத்திரம். மறம்- பாவம். உபக்கிரமித்தார்- தொடங்கினா.

ஙச. பன்னியா- பூத்தினியர். மனு- மந்திரம்.

ஙரு. சவுநகர் முனிவர்களுக்கு முகம போல்வார். தளி -கோயில்.

ஙசா. அருவும் உருவும. உபயம்- ரூபாரூபம்.

ஙஎ. ஓதின் நின்னலது. பரமசிவன அருவததிருமேனிகொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்தலத்தைக் கேட்கவிரும்பினர்.

ஙஅ. ஓர்தரு நசை - ஆராயும இச்சை. அனறு தீர - விரோதம நீங்கிய.

ஙகூ. அந்த வேலை - அந்தச்சமயத்தில. அளவா - கலந்து- சந்தம - அழகு. பந்தம் - கட்டு.

ச0. விரவு போக்கு இலான் - பரமசிவன். புரவு - காத்தல. கரவு-கள்ளம. மாணுக்கா கலப்ப.

சக. விகசிதம் - மலர்ச்சி.

சஉ. மயிலின - மயில போல. நந்த ஓர்நரில - மிக உணரு மாணாக்கா

